வேண்டுவதில்லை. ஏன்? அது பல்லக்கைச் சுமப்பவரிடத்தும், பல்லக்கில் ஏறிச் செல்வோரிடத்தும் வெளிப்படையாக விளங்குவது' என்று அவர் சொல்வர்.

ஊழை உளங்கொண்டு பொருள் கூறுவதில் உயர்வு தாழ்வு தோற்றத்துக்கு இடம் நேரும். அது போராட்டத்தை எழுப்புவதாகும்.

ஆசிரியர் ஊழில் உறுதி யில்லாதவரல்லர். அவர்க்கு அதன்கண் உறுதியுண்டு. ஊழுக்கெனத் தனி அதிகாரம் ஒன்று அவரால் அருளப்பட்டுளது. ஊழ் இப்பாட்டில் இடம் பெறவில்லை என்பது எனது கருத்து. விளக்கம் ஊழ் அதிகாரத்தில் செய்யப்படும்.

ஊழிற் கருத்திருத்தாது, "அறத்தாறு" என்பதற்கு அறநெறி என்றே நேர்பொருள்கொண்டு, அறநெறி இரு சாராரிடத்தும் பொதுமையாக விளங்குவது என்று விளக்க உரை பகர்வது ஏற்புடைத்தாகும்.

பொதுமை

தொழின் முறைகள் ஒழுங்காக நடைபெற்றாலன்றி உலகில் அமைதி நிலவாது. அத்தொழின் முறைகளை யொட்டிப் பிறப்பில் உயர்வு தாழ்வு கற்பிப்பது அமைதி காப்பதாகாது. தொழின்முறை எதுவாயினும் ஆக. தொழில் புரிவோரிடை உயர்வுமில்லை; தாழ்வுமில்லை. எத்தொழின்முறையிலும் அறநெறி பொதுவாக நிலவிக்கொண்டிருக்கும். பொதுவில் நிலவும் அறநெறியில் நடைபெறும் தொழின்முறைகளில் உயர்வு ஏது? தாழ்வு ஏது?

பல்லக்கைத் தாங்கிச் செல்வோரும் மனிதரே. அதில் ஏறிச் செல்வோரும் மனிதரே. இருவரும் ஒரு வழியில் பிறந்தவரேயாவர். இருவரும் தொழின் முறையில் ஈடுபட்டவரேயாவர். அறநெறி தொழிலிடைப் பொதுவாயிலங்குவது.

அறநெறி, பல்லக்கைத் தாங்கலில் சுருங்கியும், அதில் செல் கையில் பெருகியும் நிற்பதோ? இல்லை. பல்லக்கைச் சுமந்து செல்வோரும் அறநெறி நின்றால் அறவோராகலாம். பல்லக்கில் ஊர்ந்து செல்வோரும் அறநெறி நின்றால் அறவோ ராகலாம். அறவோராகும் வாய்ப்பு இருவர்க்கும் உண்டு. ஒருவர்க்கு மட்டும் அவ்வாய்ப்பில்லை. "அறத்தாறு" ஒரு சாரார் பக்கஞ் சாயுந் தன்மையுடையதன்று. ஆகவே, "அறத்தா றிதுவென வேண்டா" என்றார். என்னை? அது, "சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை" வெளிப் படையாக விளங்கலான் என்க. 'அறநெறி எத்தன்மைய தென்று ஆராய வேண்டுவதில்லை. அந்நெறி வழாத நடை வேண்டும்' என்பது கருத்து. (கo)

திருக்குறள் பாயிர மூலமும்

திரு. வி. க. இயற்றிய விரிவுரையும் முற்றுப்பெற்றன.





# பாட்டு முதற் குறிப்பு